# Irattai Naga Bhandam - 2 on Vaishnavi



## இரட்டை நாகபந்தம் (வேறு)

(குறள் வெண்பா)

"முல்லை வடவன வைணவியே! மூவுலகு
ணல்லைநீ! நல்லுறவீ! நன்கு,"[1]

(இ-ள்) வடமுல்லை வாயில் வைஷ்ணவியே! மூன்று உலகங்களிலும் நல்லவள் நீ (எனக்கு) நன்கு, அடியார்களுடைய சேர்க்கையாம் நல்ல உறவை, (ஈ) கொடுப்பாயாக!

(குறள் வெண்பா)

"உத்தரமுல் லைவை ணவியே!மற் றுண்ணமுத
மொத்த பதவீ டுதவு,"[2]

(இ-ள்) வடமுல்லை வாயில் வைணவீயே! உண்ணப்படுகின்ற தேவாமிர்தம் போன்ற பதமாகிய மோட்ச வீட்டை (எனக்கு) உதவியருளுக! (மற்று-அசை)

### குறிப்பு

தண்டியலங்காரத்தில் காணப்படும் இரட்டை நாகபந்தம் போல் பல வளைவுகளுடன் கடினமாக இல்லாமல் எளிய வகையில் இவை பாடப்பட்டுள்ளன. படத்தில் பாம்பின் வயிற்று நடுப் பொது எழுத்துக்களைக் கூட்டிப் படிக்க. "வைணவீ", என வரும்.

இலக்கண விளக்கம் இரட்டைநாக பந்தத்திற்கு எழுத்து நிலை கூறுவதைப் பின்வருமாறு காணலாம்.

இதற்குரிய வெண்பாப் பாடல் 63 எழுத்துக்களையுடைய தாகும். இதில், 6ம் 8ம், 14ம் 40ம், 16ம் 18ம், 20ம் 46ம், 22ம் 24ம், 26ம் 28ம், 30ம் 48ம், 32ம் 50ம், 34ம் 55ம், 42ம் 44ம், 58ம் 60ம் ஒரே எழுத்துக்களாக வருதல் வேண்டும்.

### இதை விளக்கும் பாடல்

எட்டினுக்கு ஆறாகும் எண்ணைந் தினுக்கே
இயைந்த பதினாலதாகும்
ஈரெட் டினுக்குவரு பதினெட்டு நாலைந்
தினுக்குநாற் பத்தாறுதான்

---

1. வைணவி சந்நதி முறை பா. 540
2. ,, ,, ,, பா. 541